கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடி

## மூலமும் உரையும்,

கொன்றைவேந்தன் மூலமும்உரையும்,

அதிவீரராமபாண்டியன் அருளிச்செய்த

வெற்றிவேற்கை மூலமும்,

பாலபோதமும் அடங்கியுள்ளன.

இவை

சென்னைப்புரசை

நாராயணசாமிப்பிள்ளை அவர்களது

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்

விலை] பதிப்பிக்கப்பட்டன. [அணா 1

16, சரவணப்பெருமாள் முதலிவீதி,

புரசை, சென்னை.





கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடி மூலமும் உரையும்.

## காப்பு.

ஆத்திசூடி யமர்ந்ததேவனை
ஏத்தியேத்தித் தொழுவோம்யாமே.

(இதன்பொருள்.) ஆத்திசூடி-ஆத்திமாலையைச்சூடிய பரமசிவன், அமர்ந்த-விரும்பிய, தேவனை-மூத்தமகனாகிய விநாயகக்கடவுளை, ஏத்தியேத்தி-துதிசெய்து துதிசெய்து, தொழுவோம்-வணங்குவோம், யாம்-யாங்கள் என்றவாறு, ஏகாரம்-ஈற்றசை.

## நூல்.

௧. அறஞ்செய விரும்பு.

அறம்-தருமத்தை, செய-செய்வதற்கு, விரும்பு-நீ ஆசைகொள்ளு.

௨. ஆறுவது சினம்.

ஆறுவது-உன்னுள்ளே தணியவேண்டுவது, சினம்-கோபமேயாம்.

௩, இயல்வது கரவேல்,

இயல்வது-கொடுப்பதற்கு இசைவதை, கரவேல்-நீ இரப்பவர்களுக்கு ஒளியாதே.

௪, ஈவது விலக்கேல்,

ஈவது-ஒருவருக்கொருவர் கொடுப்பதை, விலக்கேல்-நீ விலக்காதே.

௫, உடையது விளம்பேல்,

உடையது - உனக்குள்ள ஆஸ்தியை, விளம்பேல்-நீ பிறரறியச் சொல்லாதே.

௬, ஊக்கமது கைவிடேல்,

ஊக்கமது - செய்தொழிலில் மனஞ்சோராமையை, கைவிடேல்-நீ கைவிடாதே.

௭, எண்ணெழுத் திகழேல்,

எண்-கணிதநூலையும், எழுத்து - இலக்கணநூலையும், இகழேல்-நீ இகழாமற் கற்றுக்கொள்ளு, கணிதம்-கணக்கு.

௮, ஏற்ப திகழ்ச்சி,

ஏற்பது-ஒருவரிடத்திலேபோய் இரப்பது, இகழ்ச்சி-உனக்குப் பழிப்பாகும்.

௯, ஐய மிட்டுண்,

ஐயம்-பிச்சையை, இட்டு-இரப்பவர்களுக்குக் கொடுத்து, உண்-நீயுமுண்ணு.

௧௰, ஒப்புரவொழுகு.

ஒப்புரவு-உலகநடையை அறிந்து, ஒழுகு-நீ அந்த வழியிலே நட.

௧௧, ஓதுவதொழியேல்,

ஓதுவது-நூல்களைவாசிப்பதில், ஒழியேல்-நீ எப்போதும் நீங்காதே.

௧௨, ஔவியம் பேசேல்,

ஔவியம்-பொறாமைவார்த்தைகளை, பேசேல்-நீ பேசாதே.

௧௩, அஃகஞ் சுருக்கேல்,

அஃகம்-தானியவிலையை, சுருக்கேல்-நீ அதிக லாபத்துக்காக குறையாதே.

௧௪, கண்டொன்று சொல்லேல்,

கண்டு-ஒன்றைக்கண்டு, ஒன்று-வேறொன்றை, சொல்லேல்-நீ சாக்ஷியாகும்போது, சொல்லாதே, கண்டபடியே சொல்லென்பது-கருத்து.

௧௫, ஙப்போல் வளை,

ஙப்போல்-ஙகாரம், தான்பிரயோசனமுள்ளதாய் இருந்து தன்வருக்கத்தைத் தழுவுதல்போல, வளை-நீ பிரயோசனமுள்ளவனாய் இருந்து உன் இனத்தைத்தழுவு.

கசு, சனி நீராடு,

சனி-சனிக்கிழமைதோறும், நீர் ஆடு-எண்ணெய் இட்டுக்கொண்டு நீரில்தலைமுழுகு; புதன்கிழமையிலும் முழுகலாம்.

கஎ, ஞயம்பட வுரை,

ஞயம்பட-பேசுஞ்சொல்லிலே இன்பம் விளையும்படி, உரை-நீ பேசு, நயம்-என்பது ஞயமெனப்போலாயிற்று.

கஅ, இடம்பட வீடெடேல்,

இடம்-இடமானது, பட-அளவுக்கு மேற்பட்டு வெறுமையாய்க்கிடக்கும்படி, வீடு-வீட்டை, எடேல்-நீ பெரிதாகக் கட்டாதே.

ககூ, இணக்கமறிந் திணங்கு,

இணக்கம்-சிநேகனுக்கு ஏதுவாகிய நற்குண நற்செய்கைகளை, அறிந்து-தெளிந்து, இணங்கு-பின், ஒருவனோடு சிநேகஞ்செய்.

உ0, தந்தைதாய்ப் பேண்,

தந்தை-நீ உன்பிதாவையும், தாய்-மாதாவையும், பேண்-எப்போது பூசித்துக்காப்பாற்று.

உக, நன்றி மறவேல்,

நன்றி-ஒருவர் உனக்குச்செய்த உபகாரத்தை, மறவேல்-ஒருபோதும் மறவாதே.

உஉ, பருவத்தே பயிர்செய்,

பயிர்-பயிர்களை, பருவத்தே-அதுகளையும் பக்குவகாலத்திலே, செய்-வேண்டும் முயற்சியிலே தழுவாமல் இடு. பயிருக்குவேண்டும் முயற்சிகளாவன உழுதல், எரு இடுதல், களைபிடுங்குதல், நீர்பாய்ச்சல் காத்தல் என்கிற ஐந்தும் ஆம்.

உ௩, மண்பறித் துண்ணேல்,

மண்-நிலம், பறித்து-வழக்குத்தீர்ப்புக்கு வரும் குடிகளுடைய பொருளைக் கவர்ந்து, உண்ணேல்-நீ சீவனம் பண்ணாதே.

உ௪, இயல்பலாதன செயேல்,

இயல்பு அலாதன-தருமநூலுக்குப் பொருந்தபல்லாதவைகளை, செயேல்-நீ செய்யாதே,

உ௫, அரவ மாட்டேல்,

அரவம்-நஞ்சையுடைய பாம்புகளை, ஆட்டேல்-நீ பிடித்து ஆட்டாதே.

உ௬, இலவம் பஞ்சிற்றுயில்,

இலவம்பஞ்சில்-இலவம் பஞ்சுமெத்தையிலே, துயில்-நீ நித்திரைசெய்.

உ௭, வஞ்சகம் பேசேல்,

வஞ்சகம்-கபடவார்த்தைகளை, பேசேல்-நீ பேசாதே.

மூலமும் உரையும்.

உ௮, அழகலாதன செய்யேல்,

அழகலாதன-நீ துன்பப்படவந்த காலத்தும் இழிவுள்ள செய்கைகளை, செய்யேல்-செய்யாதே.

அழகுடைமையன் உயர்வுள்ள செயல்கள் ஆதலால் அழகலாதன இழிவுள்ள செயல்கள் என்பதாம்.

உ௯, இளமையிற் கல்,

இளமையில்-இளமைப்பிராயத்திலே, கல்-நீ வித்தையைக் கற்றுக்கொள்.

௩௰, அறனை மறவேல்,

அறனை-செய்யத்தக்க, தருமத்தை மறவேல்-நீ ஒருபோதும் மறவாதே.

௩௧, அனந்தல் ஆடேல்,

அனந்தல்-நித்திரையை, ஆடேல்-நீ அதிகமாகச் செய்யாதே,

௩௨, கடிவது மற,

கடிவது-ஒருவரைச் சினந்துபேசுவதை; மற-நீ மறந்துவிடு.

௩௩, காப்பது விரதம்,

காப்பது-உயிர்களுக்குத்தீங்குசெய்யாமல் அவைகளைக்காப்பாற்றுவதே, விரதம்-விரதமாம்,

௩௪, கிழமைப்பட வாழ்,

கிழமைப்பட-உன்பொருளை பிறருக்கும் உரிமையாம்படி, வாழ்-நீ வாழு.

௧௫, கீழ்மை அகற்று,

கீழ்மை-கீழ்மையாகிய குணத்தை, அகற்று-நீ நீக்கு.

௧௬, குணமது கைவிடேல்,

குணமது-மேலாகிய குணத்தை, கைவிடேல்-நீ கைவிடாதே.

௧௭, கூடிப் பிரியேல்,

கூடி-நல்லவரோடு சிநேகித்து, பிரியேல்-நீ பின் அவரைவிட்டு நீங்காதே.

௧௮, கெடுப்பதொழி,

கெடுப்பது-பிறருக்குக் கேடுசெய்வதை, ஒழி-நீ விட்டுவிடு.

௧௯, கேள்வி முயல்,

கேள்வி-கற்றவர்சொல்லும் நூற்பொருளைக் கேட்டதற்கு, முயல்-நீ முயற்சிசெய்.

௨௰, கைவினை கரவேல்,

கைவினை-உனக்குத்தெரிந்ததைத்தொழிலை, கரவேல்-நீ சமயத்திலே ஒளியாதே.

௨௧, கொள்ளை விரும்பேல்,

கொள்ளை-பிறருடைய பொருளைக் கொள்ளையிடுதற்கு, விரும்பேல்-நீ ஆசைப்படாதே.

௪௨, கோதாட்டு ஒழி,

கோது-குற்றம்பொருந்திய ஆட்டு-விளையாட்டை, ஒழி-நீ நீக்கு.

௪௩, சக்கர நெறிநில்,

சக்கரநெறி-அரசனுடைய ஆஞ்ஞாசக்கரம்செல்லும் வழியில், நில்-அடங்கிநில், அரசர்களுடைய கட்டளைக்கு அமைந்துநட என்பது கருத்து.

௪௪, சான்றோர் இனத்திரு,

சான்றோர்-அறிவினாலே மிகுந்தவர்களுடைய, இனத்து-கூட்டத்திலே, இரு-நீ எந்நாளும் சேர்ந்து இரு.

௪௫, சித்திரம் பேசேல்,

சித்திரம்-மெய்போலத்தோன்றும் பொய்மொழிகளை பேசேல்-நீ பேசாதே.

௪௬, சீர்மை மறவேல்,

சீர்மை-புகழுக்கு ஏதுவாகிய குணத்தை, மறவேல்-நீ மறந்துவிடாதே.

௪௭, சுளிக்கச் சொல்லேல்,

சுளிக்க-கேட்பவர் கோபிக்கும்படியாக, சொல்லேல்-நீ ஒன்றையும் பேசாதே.

௬௧, தேசத்தோடொட்டிவாழ்.

தேசத்தோடு - நீவசிக்கும் தேசத்திலுள்ளவர்களுட-
ன், ஒத்து-பகையில்லாமல், வாழ்-வாழ்.

௬௨, தையல்சொற் கேளேல்,

தையல்-உன் மனைவியுடைய, சொல் - சொல்லை, கே
ளல்-நீ கேட்டு நடவாதே.

௬௩, தொன்மை மறவேல்,

தொன்மை-பழமையாகிய சிநேகத்தை, மறவேல் - நீ
மறந்துவிடாதே.

௬௪, தோற்பன தொடரேல்,

தோற்பன-தோல்வியடையக்கூடிய வழக்குகளிலே,
தொடரேல்-நீ சம்மந்தப்படாதே.

௬௫, நன்மை கடைப்பிடி,

நன்மை-புண்ணியத்தையே, கடைப்பிடி-நீ விடாமல்
உறுதியாகப்பிடி.

௬௬, நாடொப்பனசெய்,

நாடு-உன்நாட்டில் உள்ளோர்பலரும் ஒப்பன-ஒத்து
கொள்ளத்தக்க நல்ல காரியங்களை, செய்-நீ செய்.

௬௭, நிலையிற் பிரியேல்,

நிலையில்-நீ நிற்கின்ற உயர்ந்த நிலையிலே நின்று, பிரி
யல்-ஒருபொழுதும் நீங்காதே.

௬௮, நீர்விளையாடேல்,

நீர்-ஆழமுள்ள நீரிலே, விளையாடேல்-நீ நீந்தி விளையாடாதே.

௬௯, நுண்மை நுகரேல்,

நுண்மை-நோயைத்தருகிறசிற்றுண்டிகளை, நுகரேல்-நீ-உண்ணாதே.

௭௰, நூற் பலகல்,

நூல்பல-அறிவை வளர்க்கிறநூல்கள் பலவற்றையுங் கல்-நீ கற்றுக்கொள்.

௭௧, நெற்பயிர் விளை,

நெற்பயிர்-நெல்லுப்பயிரை, விளை-நீ வேண்டிய முயற்சிசெய்து விளைவி.

௭௨, நேர்பட வொழுகு,

நேர்பட-உன் ஒழுக்கம் கோணாமல் செவ்வைப்பட ஒழுகு-நீ நட.

௭௩, நைவினை நணுகேல்,

நைவினை-பிறர்கெடத்தக்க, வினை-தீவினைகளை, நணுகேல்-நீ ஒருபோதும் சேராதே.

௭௪, நொய்ய வுரையேல்,

நொய்ய-பயன் இல்லாத அற்பவார்த்தைகளை, உரையேல்-நீ ஒருபோதும் சொல்லாதே.

௭௫, நோய்க்கிடங்கொடேல்.

நோய்க்கு-வியாதிகளுக்கு, இடங்கொடேல்-அபத்தியம் முதலானவைகளைச் செய்து இடங்கொடாதே.

௭௬, பழிப்பன பகரேல்,

பழிப்பன-அறிவுடையவர்களாலே பழிக்கப்படுவனவாகிய இழிசொற்களை, பகரேல்-நீ பேசாதே இழிசொற்களாவன, பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என நான்குமாம்.

௭௭, பாம்பொடு பழகேல்,

பாம்பொடு-பால்கொடுத்தவருக்கு விஷத்தைக் கொடுக்கிற பாம்பைப்போல் அவாகளுடனே, பழகேல்-நீ சகவாசஞ்செய்யாதே.

௭௮, பிழைபடச் சொல்லேல்,

பிழைபட-வழுக்கள் உண்டாகும்படி, சொல்லேல்-ஒன்றையும் பேசாதே

௭௯, பீடு பெறநில்,

பீடு-பெருமையை, பெற-பெறும்படியாக, நில்-நீ நல்லவழியிலே நில்லு.

௮௰, புகழ்ந்தாரைப் போற்றிவாழ்,

புகழ்ந்தாரை-உன்னைத் துதிசெய்து அடுத்தவரைப் போற்றி-கைவிடாமற் காப்பாற்றி, வாழ்-நீ வாழு.

௮௧, பூமி திருத்தியுண்,

பூமி-உன் விளைநிலத்தை, திருத்தி-சீர்திருத்திப்பயிர்ப்பித்து, உண்-நீ உண்ணு.

௩௨. பெரியாரைத் துணைக்கொள்,

பெரியாரை-அறிவிலே சிறந்த பெரியோரை, துணைக்கொள்-உனக்குத் துணையாகப் பேணிக்கொள்.

௩௩. பேதைமை யகற்று,

பேதைமை-பிறவிக்குக் காரணமாகிய அஞ்ஞானத்தை, அகற்று-நீ மெய்ஞ்ஞானத்தினாலே போக்கு.

௩௪. பையலோ டிணங்கேல்,

பையலோடு-சிறுபிள்ளையோடு, இணங்கேல்-நீ கூடாதே.

௩௫. பொருடனைப் போற்றிவாழ்,

பொருடனை-திரவியத்தை, போற்றி-மென்மேலும் உயரும்படி காத்து, வாழ்-நீ வாழு.

௩௬. போர்த்தொழில் புரியேல்,

போர்-சண்டையாகிய, தொழில்-தொழிலை, புரியேல்-நீ செய்யாதே.

௩௭. மனந்தடு மாறேல்,

மனம்-மனது, தடுமாறேல்-யாதொரு விஷயத்திலும் கலங்காதே

௩௮. மாற்றானுக் கிடங்கொடேல்,

மாற்றானுக்கு-பகைவனுக்கு, இடங்கொடேல் - உன்னை நெருக்கிப் பின்வருந்தும்படியாக இடங்கொடாதே.

௩௯. மிகைபடச் சொல்லேல்,

மிகைபட-சொற்கள் சுருங்காமல் அதிகப்படும்படி, சொல்லேல்-நீ சொல்லாதே.

௬௰, மீதூண் விரும்பேல்,

மீதூண்-அதிகபோசனத்துக்கு, விரும்பேல்-நீ ஆசைப்படாதே.

௬௧, முனைமுகத்து நில்லேல்,

முனைமுகத்து-சண்டைமுகத்திலே, நில்லேல்-நீபோய் நில்லாதே.

௬௨, மூர்க்கரோ டிணங்கேல்,

மூர்க்கரோடு-அறிவில்லாதவர்களுடனே, இணங்கேல்-நீ சிநேகிதம் பண்ணாதே.

௬௩, மெல்லியா டோள்சேர்,

மெல்-மென்மைபொருந்திய, உன் மனையாட்டிதனை, தோள்சேர்-நீ புணர்.

இதனாலே, பிறர்மனைவியர், பரத்தையர் என்கிற இவர்களுடைய தோள்களை ஒருபோதும் புணராதென்பது பெறப்படும்.

௬௪, மேன்மக்கள் சொற்கேள்,

மேன்மக்கள்-மேன்மையாகிய, பெரியருடையசொல்-சொல்லை, கேள்-நீகேட்டு நட.

௬௫, மைவிழியார் மனையகல்,

மைவிழியார்-மையிட்டிய கண்களையுடைய வேசிகளது, மனை-வீட்டை, அகல்-நீ ஒருபோதும் கிட்டாமல் அகன்றுபோ.

௩௬, மொழிவதற மொழி,

மொழிவது-சொல்வதை, அற-சந்தேகமற, மொழி-நீ-சொல்லு.

௩௭, மோகத்தை முனி,

மோகத்தை-மயக்கத்தை, முனி-கல்வி யறிவைக்கொண்டு நீக்கு.

௩௮, வல்லமை பேசேல்,

வல்லமை-உனக்குள்ள வல்லமையை பேசேல்-நீ புகழ்ந்துபேசாதே.

௩௯, வாதுமுற் கூறேல்,

வாது-வாதுகளை, முன்-பெரியோர் முன்னே, கூறேல்-நீ பேசாதே.

௪௰, வித்தை விரும்பு,

வித்தை-கல்வியைக் கற்கிறதற்கு, விரும்பு-நீ ஆசைப்படு.

௪௧, வீடு பெறநில்,

வீடு-மோட்சத்தை, பெற-அடைய, நில்-நீ ஞானவழியிலே நில்லு.

௪௨, உத்தமனா யிரு,

உத்தமனாய்-பலகுணங்களிலும், நன்மையுடையவனாகி, நீ இரு.

# ஆத்திசூடி

௱௩, ஊருடன் கூடிவாழ்,

ஊருடன்-ஊரிலுள்ளவருடன், கூடி-சேர்ந்து வாழ் நீ வாழு.

௱௪, வெட்டெனப் பேசேல்,

வெட்டென-கத்திவெட்டைப்போலே, பேசேல்-நீ கடினமாகப் பேசாதே.

௱௫, வேண்டி வினைசெயேல்,

வேண்டி-ஒருபிரயோசனத்தை இச்சித்து, வினை தீங்கானசெயலை, செயேல்-நீ ஒருவருக்குஞ் செய்யாதே.

௱௬, வைகறைத் துயிலெழு,

வைகறை விடியற்காலத்திலே, துயில்-தூக்கத்தைவிட்டு, எழு-நீ தினந்தோறும் எழுந்திரு.

௱௭, ஒன்னாரைச் சேரேல்,

ஒன்னாரை-பகைவரை, சேரேல்-நீ எக்காலத்திலுஞ் சேராதே.

௱௮, ஓரஞ் சொல்லேல்,

ஓரம்-பட்சபாதம், சொல்லேல்-நீ யாதொரு வழக்கிலுஞ் சாட்சிபாகும்போது சொல்லாதே.

ஔவையார் அருளிச்செய்த நீதிச்சொல்

முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# கொன்றைவேந்தன்

மூலமும் உரையும்.



காப்பு.

கொன்றைவேந்தன் செல்வனடியிணை
யென்றுமேத்தித் தொழுவோமியாமே.

(இதன் பொருள்.)

கொன்றை-கொன்றைப் பூமாலையைச்சூடியவேந்தன்-தலைவனாகிய பரமசிவனுக்கு, செல்வன் புத்திரனாகிய விநாயகமூர்த்தியினுடைய, அடியிணை-இரண்டு பாதங்களையும், என்றும்-எந்நாளும், ஏத்தி-துதிசெய்து, தொழுவோம்-வணங்குவோம், யாம்-யாங்கள்-எ-று. ஏகாரம்-ஈற்றசை.

க, அன்னையும்பிதாவும் முன்னறிதெய்வம்,

அன்னையும்-தாயும், பிதாவும்-தகப்பனும், முன்னறி-முன்காணப்பட்ட, தெய்வம் தெய்வங்களாவார்.

உ, ஆலயந்தொழுவது சாலவுநன்று,

ஆலயம்-கோயிலுக்குப்போய், தொழுவது-கடவுளை வணங்குவது, சாலவும் மிகவும், நன்று-நல்லதாகும்.

௩, இல்லறமல்லது நல்லறமன்று,

இல்லறம் மனையாளோடு கூடிச்செய்யும் இல்லறமான து, நல்லறம் எளிதிற் செய்யத்தகும் அறமாகும் அல்ல து இல்லறமல்லாத துறவறமானது, அவ்வாறு எளிதிற் செ ய்யத்தகும் அறம் அன்றாகும்.

௪, ஈயார்தேட்டைத் தீயார்கொள்வர்,

ஈயார் கொடாதவருடைய தேட்டை சம்பாத்தியத் தை, தீயார் திருடர் பகைவர் முதலான தீயவர்கள்கொ ள்வர் அவர் துன்பப்படும்படி அபகரிப்பார்.

௫, உண்டிசுருங்குதல் பெண்டிர்க்கழகு,

உண்டி சாப்பாடு, சுருங்குதல் அளவிற் குறைதல்பெ ண்டிர்க்கு பெண்களுக்கு, அழகு அழகாகும்.

௬, ஊருடன்பகைக்கின் வேருடன்கெடும்,

ஊருடன் தானிருக்குமூராருடன், பகைக்கின் ஒரு வன் விரோதித்தால், வேருடன் தன் வமிசத்துடன்கெ டும் அவன் கெடுவான்.

௭, எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்,

எண்ணும் கணிதநூலும், எழுத்தும் இலக்கணநூலு ம், கண்ணெனத்தகும் மனிதர்களுக்கு இரண்டுகண்க ளென்று சொல்லப்படும்.

௮. ஏவாமக்கள் மூவாமருந்து.

ஏவா, பெற்றவர் இதைச்செய் என்பதற்கு முன்குறிப் பறிந்து செய்கின்ற, மக்கள்-பிள்ளைகள், மூவாமருந்து அப்பெற்றவர்க்குத் தேவாமிர்தத்திற் கொப்பாவார்.

௯. ஐயம்புகினும் செய்வனசெய்.

ஐயம்புகினும் பிச்சையெடுத்தாலும், செய்வனசெய் செய்யத்தகும் கருமங்களை, செய் நீ விடாதுசெய்.

ஒருநல்ல நற்குணமுடைய வொருவனை, பற்றி தஞ்ச மாகப் பற்றிக்கொண்டு, ஓரகத்து ஓரிடத்திலேதானே, இரு எப்போதும் வாசம்பண்ணு.

௧௦. ஓதலினன்றே வேதியர்க்கொழுக்கம்.

ஓதலின் வேதமோதலினும், நன்றே நல்லதே, வேதியர்க்கு பார்ப்பாருக்கு, ஒழுக்கம் ஆசாரம்.

௧௨. ஔவியம்பேசுதல் ஆக்கத்திற்கழிவு.

ஔவியம் பொறாமைச் சொல்லுகளை, பேசுதல் ஒருவனிடத்துப்பேசுதல், ஆக்கத்திற்கு அவன் செல்வத்திற்கு, அழிவு கேட்டைத்தருவதாகும்.

௧௩. அஃகமுங்காசுஞ் சிக்கெனத்தேடு.

அஃகமும் தானியத்தையும், காசும் திரவியத்தையும் சிக்கெனத்தேடு வீண்செலவு செய்யாமற் சம்பாதி.

௧௪, கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை,
கற்பெனப்படுவது பெண்களுக்கு கற்பென்று சொல்லப்படுவது, சொல் கணவர்சொல்லுக்கு, திறம்பாமைத நடவாமையாம்.

௧௫, காவலுனே பாவையர்க்கழகு,
காவலுனே கற்புக் கழிவுவாராமற் காவலோடு கூடியிருக்கிறது தானே, பாவையர்க்குபாவைபோலுமுருவமுடைய பெண்களுக்கு, அழகு அழகாகும்.

௧௬, கிட்டாதாயின் வெட்டென மற,
கிட்டாதயின் இச்சித்தவொருபொருள் கிடைப்பதாக விருந்தால், வெட்டென சீக்கிரத்திலேதானே, அப்பொருளை மறந்துவிடு.

௧௭, கீழோராயினுந் தாழவுரை,
கீழோராயினும் கேட்பவர் உனக்குக்கீழ்ப்பட்டவராயிருந்தாலும், தாழ உன்சொல் வணக்கமுடையதாகவிருக்க, உரை அவருடன் பேசு.

௧௮, குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை,
குற்றம் குற்றங்களை, பார்க்கின் சோதித்துப்பார்த்தால், சுற்றம் உறவாவோர், இல்லை ஒருவருமில்லை.

க௯, கூரம்பாயினும் வீரியம்பேசேல்,

கூரம்பாயினும் உன்கையிலிருக்கிறது கூர்மைபொருந்திய அம்பாக விருந்தாலும், வீரியம் வீரத்தன்மையை, பேசேல் வீணாகப்பேசாதே.

உ௰, கெடுவதுசெய்யின் விடுவதுகருமம்,

கெடுவது கெடுவனத, செய்யின் தன்கிளைஞன் செய்தால், விடுவது அவன்கிளைஞனை விடுவதே, கருமம் விசேஷித்த நற்செய்கையாம்.

உக, கேட்டிலுறுதி கூட்டுமுடைமை,

கேட்டில் கைப்பொருளிழந்தபோதிலும், உறுதி மனதளராமையானது, உடைமை முன்போல் அப்பொருளுடையனாந் தன்மையை, கூட்டும் சேர்க்கும்.

உஉ, கைப்பொருடன்னின் மெய்ப்பொருள்கல்வி,

கைப்பொருடன்னின் கையிலிருக்கிற பொருளைப் பார்க்கிலும், மெய்ப் பொருள் மெய்ப் பொருளாவது, கல்வி கற்றவித்தையேயாம்.

உ௩, கொற்றவனறித லுற்றிடத்துதவி,

கொற்றவன் அரசனானவன், அறிதல் ஒருவனை அறிந்திருக்கிறது, உற்றிடத்து அவனுக்கு ஆபத்து வந்தவிடத்து, உதவி உதவியாகும்.

உசு, கோட்செவிக்குறளைக் காற்றுடனெருப்பு,

கோட்செவி - கோள்கேட்குங் குணத்தோனது காதில் குறளை-பிறர்மேலொருவன் வந்து சொன்ன கோள் காற்றுடன்-காற்றுடன்சேர்ந்த, நெருப்பு-நெருப்பைப்போலாகும்

உடு, கௌவைச்சொல்லி னெவ்வருக்கும்பகை,

கௌவை - பிறர்மேல் பழிச்சொல்லுகளை, சொல்லின் - ஒருவனசொன்னால், எவருக்கும் - எல்லோருக்கும்-பகை-அவன்பகையாவான்,

உசு, சந்ததிக்கழகு வந்திசெய்யாமை,

சந்ததிக்கு - தன்வமிசம்பெருகுதற்கு, அழகு-அழகாவது, வந்திமலடியாக, செய்யாமை செய்யாமல், தன் மனையாளோடு கூடிவாழ்வதாம்.

உஎ, சான்றோரென்கை யீன்றோற்கழகு,

சான்றோரென்கை-தன்புத்திரரைக் கல்வியறிவால் நிறைந்தாரென்று கற்றவர்சொல்லுகிறது, ஈன்றோற்கு பெற்றவளுக்கு, அழகு அழகாகும்.

உஅ, சிவத்தைப்பேணிற் றவத்திற்கழகு,

சிவத்தை-எண்ணியபலனைத்தரும் பரமசிவத்தை பேணின்-குறித்துத் தவஞ்செய்தால், தவத்திற்கு-செய்யும் அத்தவத்திறுக்கு அழகு-அழகாகும்.

௯௯, சீரைத்தேடின் ஏரைத்தேடு,

சீரை - செல்வத்தை, தேடின் உனக்குத் தேவையானால், ஏரை பயிரிடுந்தொழிலை, தேடு நீ தேடிக்கொள்ளு.

௱௦, சுற்றத்திற்கழகு சூழவிருத்தல்,

சுற்றத்திற்கு - உறவின் முறையாருக்கு, அழகு அழகாவது, சூழவிருத்தல் சமீபங்களிலே குடியிருக்கையாம்.

௱௧, சூதும்வாதும் வேதனைசெய்யும்,

சூதும் - சூதாடுதலும், வாதும் தர்க்கம்பேசுதலும், வேதனை பகையாகவரும் வருத்தத்தை, செய்யும் அவைகளில் [illegible]குகின்றவர்களுக்கு உண்டாகும்.

௱௨, செய்தவமறந்தாற் கைதவமாளும்,

செய்தவம் - செய்யுந் தவத்தை, மறந்தால் ஒருவன் மறந்தால் கைதவம் வஞ்சனையாகிய மாயை [illegible] ஆளும் அவனை அடிமைகொண்டாளும்.

௱௩, சேமம்புகினுஞ் சாமத்துறங்கு,

சேமம் - காவலிலே, புகினும் போய் ஒருவேலையுமில்லாதிருப்பினும், சாமத்து தினந்தோறும் பாதிராத்திரியானபின், உறங்கு நீ நித்திரைபண்ணு.

௩௪, சையொத்திருந்தால் ஐயமிட்டுண்,

சையொத்திருந்தால் கைப்பொருளொத்திருந்தால், ஐயமிட்டு பிச்சையிட்டு, உண் உண்ணு.

௩௫, சொக்கரென்பவ ரத்தம்பெறுவர்

சொக்கரென்பவர் பொன்னுடையவரென்று சொல்லப்படுவோர், அத்தம் அறமுமின்பமுமாகிய மற்ற புருஷார்த்தங்களையும், பெறுவர் பெறுவார்.

௩௬, சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்,

சோம்பரென்பவர்-சோம்பலுடையவரென்று சொல்லப்படுவோர், தேம்பி வறுமையினால் வருந்தித்திரிவர் பிறரிடத்துப்போய் இரந்து திரிவார்.

௩௭, தந்தைசொன்மிக்க மந்திரமில்லை,

தந்தை-தகப்பனுடைய, சொல்-சொல்லுக்கு, மிக்க மேற்பட்ட, மந்திரம் பலனைத்தருமந்திரமானது இல்லை ஒருவனுக்கு எந்தநூலிலும் இல்லை.

௩௮, தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை,

தாய்-தாயினுடைய, சொல் சொல்லை துறந்தால் ஒருவன் தள்ளிவிட்டால், வாசகம் அதற்கு மேற்பட்ட வேதவாக்கியம் இல்லை அவனுக்கு இல்லை.

௩௯, திரைகடலோடியுந் திரவியந்தேடு,

திரைகடல் அலைகளையுடைய கடலிலே, ஓடியும் கப்பலேறித் தூரதேசங்களிற் போயாகிலும், திரவியம் திரவியத்தை, தேடு-சம்பாதி.

௪௦, திராக்கோபம் போராய்முடியும்,

திராக்கோபம் எப்போதும் ஒருவரிடத்து, நீங்காத கோபமானது, போராய்முடியும் பின்பு சண்டையாக முடியும்.

௪௧, துடியாப்பெண்டிர் மடியினெருப்பு,

துடியா தங்கணவருக்குத் துன்பம் வந்தபோது மனப்பதையாத, பெண்டிர் பெண்டுகள், மடியில் அவர்கள் மடியில், நெருப்பு சுட்டு வருத்துவதாகிய நெருப்பிருக்கிறதற் கொப்பாவார்.

௪௨, தூற்றும்பெண்டிர் கூற்றெனத்தகும்,

தூற்றும தங்கணவர்மேற் குற்றஞ்சொல்லித் தூற்றுகிற, பெண்டிற் பெண்டுகளை, கூற்றெனத்தகும் அவருக்கு யமனென்றெண்ணத்தகும்.

௪௩, தெய்வஞ்சீறிற் கைதவமாளும்,

தெய்வம்-தெய்வமானது, சீறின் ஒருவனைக் கோபிக்குமாகில் கைதவம் அவனுக்குக் கைகூடியிருந்த தவமும் மாளும் பயன்கொடாமலழியும்.

சச, தேடாதழிக்கிற் பாடாய்முடியும்,

தேடாது ஒருவன் வருந்திச் சம்பாதியாமல், அழிக்கின் இருக்கிறபொருளைச் செலவழித்தால், பாடாமுடியும் பின் அவனுக்கு வருத்தமாக முடியும்.

சரு, தையுமாசியும் வையகத்துறங்கு,

தையும்-தைமாதத்திலும், மாசியும்-மாசிமாதத்திலும், வையகத்து - பனிவருத்தந்தராத வைக்கோல் வீட்டிலே, உறங்கு நித்திரைபண்ணு.

சசா, தொழுதூண்சுவையி னுழுதூணினிது,

தொழுது ஒருவரிடத்திலே சேவித்து, ஊண்சுவையின் உண்ணுமுணவின் சுவையைப்பார்க்கிலும், உழுது பயிர்செய்து, ஊண்சுவை உண்ணுமுணவின் சுவை, இனிது இன்பம் தருவதாகுமே.

சஎ, தோழனோடேழைமைபேசேல்,

தோழனோடு-சிநேகிதனோடும், ஏழைமை உனக்கிருக்கிற சிறுமையைபேசேல் எப்படிப்பட்ட வேளையிலும் பேசாதே.

சஅ, நல்லிணக்கமல்ல தல்லற்படுத்தும்,

நல்லிணக்கமல்லது நல்ல சகவாசமல்லாதது, அல்லல் துன்பத்தை, படுத்து எப்போதும் உண்டாக்கும்.

௫௮, நாடெங்குப் வாழக் கேடொன்றுமில்லை,

நாடெங்கும்-தேசமெங்கும், வாழ-செழித்திருக்க கேடொன்றும்-திருட்டு முதலான கேடுகளொன்றும் இல்லை உண்டாகாது.

௫௯, நிற்கக்கற்றல் சொற்றிறம்பாமை,

நிற்கக்கற்றல் தன்னிடத்து நிலைபெறக் கற்றலாவ, சொல் தான்சொல்லுஞ் சொல்லுகளிலே, திறம்பாமை ஒருபோதுந் தப்பிப்போகாமையாம்.

௬௦, நீரகம்பொருந்திய வூரகத்திரு,

நீர்-நீர்வளமானது அகம்-தனக்குள்ளே பொருந்தி மழையில்லாத பஞ்சகாலத்திலுமமைந்த ஊரகத்து உலேயிரு குடியிரு.

௬௧, நுண்ணியகருமம் எண்ணித்துணி

நுண்ணிய சிறியகரும் முத்தொழில்களையும், கைமுடிக்கும் வழியை நன்றாக ஆலோசித்து துணிவின் அதனைச் செய்யத்துணி.

௬௨, நூன்முறைதெரிந்து சீலத்தொழுகு,

நூல்-மனுநூலிலே சொல்லப்பட்ட முறை-விதிக ன்முறையை அறிந்து தெரிந்து-சீலத்து நல்லொழுக் வழியிலே ஒழுகு-நட.

௫௪, நெஞ்சையொளித்தொரு வஞ்சகமில்லை,

நெஞ்சை தன்மனதை, ஒளித்து அறியாமலொளித்து, வஞ்சகம் யாதொருவஞ்சனையும், இல்லை யாவரிடத்திலும் இல்லை

௫௫, நேராநோன்பு சீராகாது,

நேரா ஒருவர் வருத்தத்திற்கு உடன்படாமற் செய்கிற, நோன்பு விரதமானது, சீராகாது சீராகமுடியாது.

௫௬, நைபவரெனினு நொய்யவுரையேல்,

நைபவரெனினும் கேட்போர் எதிர்பேசாமல் வருந்துவோராயினும், நொய்ய அற்பமாகிய சொல்லுகளை, உரையேல் நீ சொல்லாதே.

௫௭, நொய்யவரென்பவர் வெய்யவராவர்,

நொய்யவரென்பவர் உருவத்தாற் சிறியவரென்றிகழப்பட்டவருள், வெய்யவராவர் செய்காரியத்தால் யாவரும் விரும்புங் குணத்தினராவர்.

௫௮, நோன்பென்பது கொன்றுதின்னாமை,

நோன்பென்பது தவமென்று சொல்லப்படுவதுகொன்றுதின்னாமை ஒருசீவனை வதைசெய்து அதன் மாமிசத்தைத் தின்னாமையாம்

௫௯, பண்ணியபயிரிற் புண்ணியந்தெரியும்,

பண்ணிய ஒருவர்செய்த, பயிரின் விளைவினாலும் விளைவில்லாமையாலும், புண்ணியம் அவனிடத்துப் புண்

ணியமிருக்கிறதும் இல்லாமையும், தெரியும் அறியப்படும்.

௫௰, பாலோடாயினுங் காலமறிந்துண்,

பாலோடாயினும் பாலோடுகூடிய சாதத்தையுண்டலும், காலமறிந்து உண்ணத்தகுங் காலத்தையறிந்துண் அதனை உண்ணு.

௫௧, பிறன்மனைப்புகாமை யறமெனத்தகும்,

பிறன் பிறனுடைய, மனைவி பெண்சாதியினிடத்தில் புகாமை இச்சித்துப் போகாமையே, அறமெனத்தகும் பலதருமங்களிலும் உயர்ந்த தருமமென்று சொல்லத் தகும்.

௫௨, பீரம்பேணி பாரந்தாங்கும்,

பீரம்பேணி முலைப்பால் குறைவரவுண்டு வளர்த்தவன், பாரம் பாரமான சுமையை, தாங்கும் சுமப்பான் (அதுபோல) முன்னைக்காரணங்களைக் குறைவறக்கொண்டவன் பின்னே பெரியகாரியங்களையும் வருத்தமின்ற முடிப்பான்.

௫௩, புலையுங்கொலையுங் களவுந்தவிர்,

புலையும் அசுத்தமாகிய மாமிசந்தின்னுதலையும், கொலையும் சீவவதைசெய்தலையும், களவும்பிறர்பொருளைத் திருடுதலையும்தவிர் செய்யாதிரு.

௬௪, பூரியோர்க்கில்லை சீரியவொழுக்கம்,

பூரியோர்க்கு கீழ்மக்களுக்கு, சீரிய சிறப்பாகிய, ஒழுக்கம் நடைக்கையானது, இல்லை உண்டாகாதிலை.

௬௫, பெற்றோர்க்கில்லை சுற்றமுஞ்சினமும்,

பெற்றோர்க்கு தத்துவஞானம் பெற்றவர்க்கு, சுற்றமும் உறவினர்மேலாசையும், சினமும் மற்றவர்மேல்வெறுப்பும், இல்லை, இல்லை.

௬௬, பேதைமையென்பது மாதர்க்கணிகலம்,

பேதைமையென்பது அறியாமையென்று, சொல்லப்படுங்குணமானது, மாதர்க்கு பெண்களுக்கு, அணிகலம் ஆபரணமாகும்.

௬௭, பையச்சென்றால் வையந்தாங்கும்,

பைய மெள்ள, சென்றால் ஒருவன் தருமமானவழியிலே நடந்தால், வையம் பூமியிலுள்ளோர், தாங்கும் அவனை மேலாகக்கொள்வார்.

௬௮, பொல்லாங்கென்பவை யெல்லாந்தவிர்,

பொல்லாங்கென்பவை தீங்குகளென்று சொல்லப்பட்டவைகளாகிய, எல்லாம் எல்லாவற்றையும், தவிர எப்போதுஞ்செய்யாதிரு.

௬௯, போனகமென்பது தானுழந்துண்டல்,

போனகமென்பது சாப்பாடென்று சொல்லப்படுவது தானுழந்து தான்பிரயாசைப்பட்டுச் சம்பாதித்து உண்டல் உண்ணுதலாம்.

௭௰, மருந்தேயாயினும் விருந்தோடுண்,

மருந்தேயாயினும் - உண்ணப்படுவது கிடைத்தற்கரிய தேவாமிர்தமேயாகிலும், விருந்தோடு - வந்த விருந்தாளிகளோடு கூடி, உண் - உண்ணு.

௭௰௧, மாரியல்லது காரியமில்லை,

மாரியல்லது - மழையில்லாமல், காரியம் - யாதொரு காரியமும், இல்லை - யாவருக்கும் நடப்பதில்லை.

௭௰௨, மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை,

மின்னுக்கெல்லாம் - வானத்திலே காணப்பட்ட மின்னலுக்கெல்லாம், பின்னுக்கு மழை - அப்போது மழையில்லாமற்போனாலும் பின்னே மழையுண்டாகும் (அதுபோல) ஒருவனிடத்திலே காணப்பட்ட நல்ல முயற்சிகளுக்கெல்லாம் அப்போது பயனில்லையாயினும் பின்னே பயனுண்டாகும்.

௭௰௩, மீகாமனில்லா மரக்கலமோடாது,

மீகாமன் - தன்னையோட்டத்தக்க மாலுமி, இல்லா - இல்லாத, மரக்கலம் - கப்பலானது, ஓடாது - கடலிலே செல்லமாட்டாது (அதுபோல) தன்னை முடிக்கத்தக்கவனில்லாத யாதொரு காரியமும் செவ்வையாக முடியாது.

௭௪, முற்பகல்செய்யிற் பிற்பகல்விளையும்,

முற்பகல்-ஒரு முகூர்த்தகாலத்தின் முன்பங்கிலே செய்யின்-பிறருக்குத் தீங்குசெய்தால், பிற்பகல்-அதன்பின்பங்கிலே, விளையும்-செய்பவர்க்கு அத்தீங்கு தானேயுண்டாகும்.

௭௫, மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்,

மூத்தோர் - பெரியோரானவர், சொல்-சொல்லுகிற வார்த்தை-வசனமானது, அமிர்தம் - தேவாமிர்தம்போலச் சிறப்புள்ளதாகக் கொள்ளப்படும்.

௭௬, மெத்தனப்படுத்த னித்திரைக்கழகு,

மெத்தன-மெத்தென்றிருக்க, படுத்தல் - பஞ்சணையிலே படுத்தல், நித்திரைக்கு-ஒருவன் செய்கிற நித்திரைக்கு, அழகு-அழகாகும்.

௭௭, மேழிச்செல்வங் கோழைபடாது,

மேழி-மேழிபிடித்து உழுதுபயிர்செய்தால் உண்டாகிற, செல்வம்-செல்வமானது, கோழைபடாது-எப்போதுங் குறைவையடையாது,

௭௮, மைவிழியாடனைக் கையகன்றொழுகு,

மைவிழியாடனை-பிறரை மயக்குகிறதற்காக மையிடு கண்களையுடைய பரத்தையரை, கையகன்று-தூரமாகநீக்கி, ஒழுகு-நல்லவழியிலே நட.

௭௬, மொழிவதுமறுக்கினழிவதுகருமம்,

மொழிவது - கற்றோர் சொல்லுகின்ற வுபாயத்தை, மறுக்கின் - கேளாமல்செய்தால், கருமம் - ஒருவன்செய்யுந் தொழில், அழிவது - கெடுவதாகும்.

௭௭, மோனமென்பது ஞானவரம்பு,

மோனமென்பது - மௌனநிலையென்பது, ஞானம் - தத்துவஞானத்திற்கு, வரம்பு - எல்லையாகும்.

௭௮, வளவனாயினு மளவறிந்தழித்துண்,

வளவனாயினும் - சய்யத்திலே சோழனுக்கொப்பான வனாயிருந்தாயானாலும், அளவு - பொருள் வரவினளவை அறிந்து - தெரிந்து, அழித்து - செலவழித்து - உண், நீ அனுபவி.

௭௯, வானஞ்சுருங்கிற் றானஞ்சுருங்கும்.

வானம் - மழையானது, சுருங்கின் - பெய்தல் குறையு மாயின், தானம் - சற்பாத்திரங்களுக்குக் கொடுக்கிறகொடையும், சுருங்கும் - குறைவுபடும்.

௮௰, விருந்திலோர்க்கில்லை பொருந்தியவொழுக்கம்.

விருந்திலோர்க்கு - விருந்தெதிர் கொள்ளாதவர்க்கு பொருந்தி - தகும்பொருந்திய, ஒழுக்கம் - இல்லறம் - இல்லை யிருந்தாயினும், இல்லாததற்குச் சமானமாகும்.

௩௪, வீரன் கேண்மை கூரம்பாகும்,

வீரன்-வீரனுடைய, கேண்மை-சினேகமொருவனுக்கிருந்தால், கூரம்பாகும்-அவனுக்கு அது வேதன் பகையை வெல்வதற்குக் கூரான அம்பாகும்.

௩௫, உரவோரென்கை யிரவா திருத்தல்,

உரவோரென்கை - வல்லவரென்று சொல்லப்படுதல் இரவாது - தனக்கு சிறுமைவந்தகாலத்திலும் பிறனிடமிரவாமல், இருத்தல்-இருக்கையாம்.

௩௬, ஊக்கமுடைமை யாக்கத்திற்கழகு,

ஊக்கம்-செய்தொழிலிலே பனைந்தளராமை, உடைமை-ஒருவன் உடையனாதல், ஆக்கத்திற்கு-அவன்செல்வத்திற்கு, அழகு-அழகாகும்.

௩௭, வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை,

வெள்ளைக்கு-களங்கமில்லாத பரிசுத்தகுணமுடையவனிடத்து, கள்ளம்-வஞ்சனைபொருந்திய, சிந்தை-நினைப்பானது, இல்லை-இராது.

௩௮, வேந்தன் சீறி னான் றுணையில்லை,

வேந்தன்-அரசனானவன், சீறின்-ஒருவன் மேல்கோபஞ்செய்தால், ஆம்-அப்போதைக்கு உபயோகமாகின்ற துணை-சகாயம், இல்லை-அவனுக்கில்லை.

வையந்தோறுந் தெய்வந்தொழு,

வையந்தோறும்-பூமியிலுள்ள ஸ்தலந்தோறும்போய் தெய்வம்-கடவுளை, தொழு-நீ தரிசித்துவணங்கு.

௯௰, ஒத்தவிடத்து நித்திரைகொள்,

ஒத்தவிடத்து-மேடுபள்ளமில்லாமற் சமமானவிடத்திலே, நித்திரைகொள்-நீ படுத்து நித்திரைபண்ணு.

௯௧, ஓதாதார்க்கில்லை யுணர்வோடொழுக்கம்,

ஓதாதார்க்கு-நல்ல நூலைப்படியாதவர்க்கு உணர்வோடும்-அறிவுடனே, ஒழுக்கம்-நல்ல நடக்கையையும், இல்லை-உண்டாகுவதில்லை.

ஔவையார் அருளிச்செய்த நீதிச்சொல்

முற்றிற்று.



அதிவீரராமபாண்டியன் அருளிச்செய்த

# வெற்றிவேற்கை மூலபாடம்.



பிரணவப்பொருளாம் பெருந்தகையைங்கரன்
சரணவற்புதமலர் தலைக்கணிவோமே.

வெற்றிவேற்கை வீரராமன்
கொற்கையாளி·குலசேகரன்புகல்

கற்றதிற்றெரிந்த நற்றொகைதன்னால்
குற்றங்களைவோர் குறைவிலாதவரே
எழுத்தறிவித்தவ னிறைவனாகும்
கல்விக்கழகு கசடறமொழிதல்
செல்வர்க்கழகு செழுங்கிளைதாங்குதல்
வேதியர்க்கழகு வேதமுமொழுக்கமும்
மன்னவர்க்கழகு செங்கோன்முறைமை
வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல்
உழவர்க்கழகிங் குழுதூண்விரும்பல்
மந்திரிக்கழகு வருபொருளுரைத்தல்
தந்திரிக்கழகு தறுகணாண்மை
உண்டிக்கழகு விருந்தோடுண்டல்
பெண்டிர்க்கழகு பேசாதிருத்தல்
குலமகட்கழகுதன் கொழுநனைப்பேணுதல்
விலைமகட்கழகுதன் மேனிமினுக்குதல்
அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்
வறியோர்க்கழகு வறுமையிற்செம்மை
(அதனால்) தேம்படுபனையின் றிரள்பழத்தொருவிதை
வானுறவோங்கி வளம்பெறவளரினும்
ஒருவர்க்கிருக்க நிழலாகாதே
தெள்ளியவாலின் சிறுபழத்தொருவிதை
தெண்ணீர்க்கயத்துட் சிறுமீன்சினையினும்
நுண்ணிதேயாயினு மண்ணல்யானை
அணிதேர்ப்புரவி யாட்பெரும்படையொடு

மன்னர்க்கிருக்க நிழலாகும்மே
(அதனால்) சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர்
பெரியோரெல்லாம் பெரியருமல்லர்
பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர்
உற்றோரெல்லா முறவினரல்லர்
கொண்டோரெல்லாம் பெண்டிருமல்லர்
அடினுமாவின்பா றன்சுவைகுன்றாது
சுடினுஞ்செம்பொன் றன்னொளிகெடாது
அரைக்கினுஞ்சந்தனந் தன்மணமறாது
புகைக்கினுங்காரகில் பொல்லாங்குகமழாது
கலக்கினுந்தண்கடல் சேறாகாது
(அதனால்) பெருமையுஞ்சிறுமையுந் தான்றரவருமே
சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பதுகடனே
சிறியோர்பெரும்பிழை செய்தனராயிற்
பெரியோரப்பிழை பொறுத்தலுமரிதே
(அதனால்) வாழியநலனே வாழியநலனே.
நூறாண்டுபழகினும் மூர்க்கர்கேண்மை
நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே
(அதனால்) ஒருநாட்பழகினும் பெரியோர்கேண்மை
இருநிலம்பிளக்க வேர்வீழ்க்கும்மே
(அதனால்) கற்கைநன்றே கற்கைநன்றே
பிச்சைபுகினுங் கற்கைநன்றே
கல்லாவொருவன் குலநலம்பேசுதல்

நெல்லினுட் பிறந்த பதராகும்மே
(அதனால்) நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன்
கற்றிலனாயிற் கீழிருப்பவனே
எக்குடிப்பிறப்பினும் யாவரேயாயினும்
அக்குடி கற்றோரை மேல்வருகென்பர்
அறிவுடையொருவனை யரசனும் விரும்பும்
அச்சமுள்ளடக்கி யறிவகத்தில்லாக்
கொச்சைமக்களைப் பெறுதலினக்குடி
எச்சமற்றேமாந் திருக்கைநன்றே
யானைக்கில்லை தானமுந்தருமமும்
பூனைக்கில்லை தவமுந்தயையும்
ஞானிக்கில்லை யின்பமுந்துன்பமும்
சிதலைக்கில்லை செல்வமுஞ்செருக்கும்
முதலைக்கில்லை நீச்சுநிலையும்
அச்சமுநாணமு மறிவிலோர்க்கில்லை
நாளுங்கிழமையும் நலிந்தோர்க்கில்லை
கேளுங்கிளையுங் கெட்டோர்க்கில்லை
உடைமையும்வறுமையு மொருவழிநில்லா
குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர்
நடைமெலிந்தோரூர் நண்ணினுநண்ணுவர்
சிறப்புஞ்செல்வமும் பெருமையுமுடையோர்

அறக்கூழ்ச்சாலை யடையினு மடைவர்
அறத்திடுபிச்சை கூவியிரப்போர்
அரசோடிருந்தரசாளினு மாளுவர்
குன்றத்தனையிரு நிதியைப்படைத்தோர்
அன்றைப்பகலே யழியினு மழிவர்
எழுநிலைமாடங் கால்சாய்ந்துக்குக்
கழுதைமேய்ப்பா ழாயினு மாகும்
நல்லஞானமும் வானமும்பெறினும்
எல்லாமில்லை யில்லில்லோர்க்கே
தறுகண்யானை தான்பெரிதாயினும்
சிறுகண்மூங்கிற் கோற்கஞ்சும்மே
குன்றுடைநெடுங்கா டூடேவாழினும்
புன்றலைப்புல்வாய் புலிக்கஞ்சும்மே
ஆரையாம்பள்ளத் தூடேவாழினும்
தேரைபாம்பிற்கு மிகவஞ்சும்மே
கொடுங்கோலரசர் வாழும்நாட்டில்
கடும்புலிவாழுங் காடுநன்றே
சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர்க்குறவர் தேயநன்றே
இல்லோரிரப்பது மியல்பேயியல்பே
இரந்தோர்க்கீவது முடையோர்கடனே

மணவணி யணிந்த மகளிராங்கே
பிணவணி யணிந்துதங் கொழுநரைத் தழீஇ
உடுத்தவாடை கோடியாக
முடித்தகூந்தல் விரிப்பினும் விரிப்பர்
பெற்றமுங் கழுதையு மேய்ந்தவப் பாழ்
பொற்றொடி மகளிரு மைந்தருங் கூடி
நெற்பொலி நெடுநக ராயினுமாகும்
வித்துமேறு முளவாயிருப்ப
எய்த்தங்கிருக்கு மேழையும்படுமே
காலையுமாலையும் நான்மறை யோதா
அந்தணரென்போ ரனைவரும்படுமே
முதலுள பண்டங் கொண்டுவாணிபஞ்செய்
ததன்பய னுண்ணா வணிகரும்படுமே
தன்மனையாளைத் தாய்மனைக்ககற்றிப்
பின்பவட் பாராப் பேதையும்படுமே
தன்னாயுதமுந் தன்கையிற்பொருளும்
பிறர்கையிற்கொடுக்கும் பேதையும்படுமே
வாய்ப்பறையாகவு நாக்கடிப்பாகவுஞ்
சாற்றுவதொன்றைப் போற்றிக்கேண்மின்
பொய்யுடையொருவன் சொல்வன்மையினால

மெய்போலும்மே மெய்போலும்மே
மெய்யுடையொருவன் சொலமாட்டாமையால்
பொய்போலும்மே பொய்போலும்மே
(அதனால்) இருவர்தஞ்சொல்லையு மெழுதாங்கேட்டே
இருவரும்பொருந்த வுரையா ராயின்
மனுநெறிமுறையின் வழக்கிழந்தவர்தாம்
மனமுறமறுகிநின் றழுதகண்ணீர்
முறையுறத்தேவர் மூவர்க்காயினும்
வழிவழியீர்வதோர் வாளாகும்மே
பழியாவருவது மொழியாதொழிவது
சுழியாவருபுனல் இழியாதொழுவது
துணையோடல்லது நெடுவழிபோகேல்
புணைமீதல்லது நெடும்புனலேகேல்
எழிலார்முலைவரி விழியார்தந்திரம்
இயலாதனகொடு முயலாகாதே
வழியேயேகுக வழியேமீளுக
இவைகாணுலகிற் கியல்பாமாறே.

வெற்றிவேற்கை மூலபாடம் முற்றிற்று.







கடவுள் துணை.

# பாலபோதம்.



## காப்பு.

சிவவிநாயகன் சேவடிவணங்கிப்
பாலபோதகம் பகருவன்யானே.

### ஒருபொருள் வாக்கியம்.

க. பிள்ளைகளே, நீங்கள் வித்தையை நன்றாக வாசித்துக்கொள்ளுங்கள் வாசித்துக்கொண்டால் அறிவுள்ளவர்களாவீர்கள் அறிவுள்ளவர்களானால் உங்களுக்குப் பணஞ்சம்பாதிக்கிற திறமையுண்டாகும் பணஞ்சம்பாதித்தால் அன்னம் வஸ்திரம் ஆபரணம் இவை முதலானவைகளை உங்களுக்கு வேண்டியபடியே பெறுவீர்கள் இதுவுமல்லாமல் தருமம் தானம் பரோபகாரமிவை முதலானவைகளைச் செய்தால் உங்களை எல்லாரும் புகழும்படியாக வாழ்வீர்கள்.

உ. பிள்ளைகளே, செல்வப்பொருளைப் பார்க்கிலுங் கல்விப்பொருளே அதிகமாகும் (அதெப்படியெனில்) செல்வப்பொருளைத் திருடர் முதலானவர்கள் அபகரிக்க

மாட்டார்கள். அல்லாமலும், செல்வப்பொருளைச் செல வழித்தாலும் அது குறைந்துபோகும் கல்விப்பொருளைப் பிறர்க்குக் கொடுக்குந்தோறும் அது வளரும்.

ரு. பிள்ளைகளே, நீங்கள் வித்தையைக் கற்குந்தோறும் உங்களுக்கு அறிவு வளர்ந்துகொண்டே வரும் (அதெப்படி ஐயா) மணற்கேணியைத் தோண்டுந்தோறும் ஊற்றுநீர் சுரந்து பெருகிக்கொண்டே வரும் இதுபோலவென்றறியுங்கள்.

ச. பிள்ளைகளே, ஒருவன் கற்ற வித்தையைப் பிறர்க்குச் சொன்னால் அந்தவித்தை பிரகாசமாகவிருக்கும் சொல்லாவிட்டால் பழிப்பை யடையும் (அதெப்படி ஐயா) கிணற்றுநீர் சிலவழிந்துக்கொண்டிருந்தால் பரிசுத்தமாயிருக்கும் இல்லாமற்போனால் அந்த நீர்கெட்டுநாற்றம் அடைந்துபோம் இதுபோலவென்றறியுங்கள்.

ஞ. பிள்ளைகளே, அசுத்தமாகிய சிறியவர்களும் பரிசுத்தமாகிய பெரியவர்களைச் சேர்ந்தால் அவர்களும் பரிசுத்தராவர்கள் (அதெப்படி ஐயா) அசுத்தமாகிய சலதாரைநீரும் பரிசுத்தமாகிய பெரிய குளத்திலே போய் விழுந்தால் பரிசுத்தமாகும் இதுபோலவென்று அறியுங்கள்.

௬ பிள்ளைகளே, ஒருவனிடத்திலே திரவியம் இருந்தால் எல்லாரும் வந்து சேர்வார்கள் திரவியம் இல்லாமற்போனால் ஒருவரும் சேரமாட்டார் (அதெப்படி ஐயா) ஏரியிலே நீர் இருந்தால் கொக்குமுதலானதுகள் வந்துசேரும் நீர் இல்லாமற்போனால் அவ்வேரியினிடத்திலே ஒன்றுஞ்சேரமாட்டாது இதுபோலவென் றறியுங்கள்.

௭. பிள்ளைகளே, நற்குணமுள்ளவன் தன்செல்வங்குறைந்து தரித்திரனானாலும் அவனை எல்லாரும் முன்னிலும் அதிகமாகவே எடுத்துக்கொள்வார்கள் (அதெப்படி ஐயா) பெரிதாகிய இரத்தினம் சாணைபிடித்துத்தேய்ந்து குறைந்துசிறிதாகிப்போனாலும் இந்தரத்தினத்தை எல்லாரும் முன்னிலும் அதிகமாகவே எடுத்துக்கொள்ளுவார்கள் இதுபோலவென்று அறியுங்கள்.

௮ பிள்ளைகளே, கனம்பொருந்தியவன் அற்பனுடனேசேர்ந்தால் தானும் அற்பனுவான் (அதெப்படி ஐயா) கனம்பொருந்திய கல்லுக்கம்பம் கனமில்லாத தெப்பத்துடனே சேர்ந்தால் தானுங்கனமிழந்து நீரின்மேல்மிதக்கும் இதுபோலவென்று அறியுங்கள்.

கூ. பிள்ளைகளே சம்பாதித்த திரவியத்தைத் தானும் அனுபவியாமல் பிறர்க்குங் கொடாமல் ஒருவன்சேர்த்து வைத்திருந்தால் அந்த திரவியத்தை அன்னியர்கள் அபகரிப்பார்கள் (அதெப்படி ஐயா) தேனீ தானுமுண்ணாமல் பிறர்க்குங் கொடாமல் கூண்டிலே சேர்த்துவைத்த தேனை வேடர்கள் அவ்வீயை துரத்திவிட்டு அபகரித்துக்கொண்டுபோவார்கள் இதுபோலவென்று அறியுங்கள்.

கO. பிள்ளைகளே, உயர்ந்தகுணமுள்ளவன தனக்கு [illegible] கிடைக்கும்படியாக இருந்தால்கடைக்குவருவான் இல்லாவிட்டால் தன்னிடத்திலேதானே யிருந்துவிடுவான் (அதெப்படி ஐயா) அதிகவாசனையுள்ள தாழம்பு வெளியிலேவந்தால் ஒருவனுடைய தலையின் மேலே ஏறியிருக்கும் இல்லாவிட்டால் தன் செடியிலேதானே இருந்துவிடும் இதுபோலவென்று அறியுங்கள்.

கக. பிள்ளைகளே, தன் காரியத்திற்குத் துஷ்டனுடைய சகாயம் வேண்டியிருந்தால் அவனுடன் கொஞ்சமாகவே சிநேகஞ்செய்யவேண்டும் அதிகமாக சிநேகஞ்செய்தால் அவன் வருத்தம் உண்டாக்குவான் (அதெப்படி ஐயா) பாக்குவெற்றிலைக்குச்சுண்ணாம்பு கொஞ்சமாகவே சேர்க்கவேண்டும் அதிகமாகச்சேர்த்தால் வாய்வெந்துபோகச்செய்யும் இதுபோலவென்று அறியுங்கள்

கஉ. பிள்ளைகளே, துஷ்டனிடத்திலே அதிகபாக்கியமிருந்தாலும் அவனைச் சேரலாகாது; சேர்ந்தால் அப

யம் வருமேயல்லாமல் பிரயோசனம் உண்டாகாது (அதெப்படி ஐயா) பாம்பினிடத்திலே மாணிக்கம் இருக்கிறதென்று அதின் சமீபத்திலேபோனால் அது கடிக்குமேயல்லாமல் மாணிக்கத்தைக் கொடாது இதுபோலவென்று அறியுங்கள்.

சரு. பிள்ளைகளே, தனக்குக் கொடாதவனிடத்திருந்து ஒருபொருளைக் கொள்ளவேணுமேயானால் அவனுக்கு இஷ்டனைக்கொண்டு அந்தப்பொருளைக் கொள்ளவேணும் (அதெப்படி ஐயா) பசுவின்பாலை யானக்கன்றைக்கொண்டுபோய்விட்டுக் கறந்துகொள்வார்கள் இதுபோலவென்று அறியுங்கள்.

ஒருபொருள் வாக்கியம் முற்றிற்று.



# இருபொருள் வாக்கியம்.



கச. பிள்ளைகளே சிறுபிராயத்திலே சாஸ்திரத்தையைப் படித்துக்கொள்ளவேண்டும் வயதுமுதிர்ந்தபின்பு புத்தி சமுசாரத்திலே விழுந்து வருத்தத்தை அடைத்துக்கொண்டிருக்கும் அப்போது படித்தாலும் வித்தைகளொருகப் புத்தியிலே பதியமாட்டாது (அதெப்படி ஐயா) அழுக்

ருப்படியாத சீலையிலே சாயம் நன்றாகப்பிடிக்கும் அழு க்குப் படிந்த சீலையிலே சாயம நன்றாகப்பிடிக்கமாட்டா து இதுபோல வென்று அறியுங்கள்.

கரு பிள்ளைகளே வித்தையைப்படித்துக் கொண்டவ னுக்கும் படியாதவனுக்கும் ரூபம் ஒன்றாகஇருந்தாலும் லோகத்தில் வித்தையைப் படித்துக்கொண்டவனே பெ ருமையை படைவான் (அதெப்படி ஐயா) அன்னமும் கொக்கும் உருவம் ஒன்றாக விருந்தாலும் நீருடன் கல ந்திருக்கிற பாலைவேறாகப் பிரித்துக்குடிக்கிற வித்தையி ருக்கின்றபடியால் அன்னம் உயர்வாகும் அந்த வித்தை இல்லாமையால் கொக்கு உயர்வாகாது இதுபோ லென் று அறியுங்கள்.

கசு பிள்ளைகளே, வித்தையுள்ளவனுக்கு அழகில்லா திருந்தாலும் எல்லாருக்கும் இஷ்டனுவான் வித்தையில் லாதவனுக்கு அழகு இருந்தாலும் ஒருவருக்கும் இஷ் டனுகமாட்டான் (அதெப்படி ஐயா) வாசனையுள்ள விலாமிச்சம்வேர் அழகுஇல்லாதிருந்தும் எல்லாருக்கும் இஷ்டமாகின்றது வாசனையில்லாத முருக்கம்பூ அழகு ள்ளதாக இருந்தும் ஒருவர்க்கும் இஷ்டமாகவில்லை இது போலவென்று அறியுங்கள்.

கஏ. பிள்ளைகளே, விவேகமுள்ளவன் தரித்திரனு யிருந்தாலும் சிரேஷ்டனவான் விவேகமில்லாதவன் பாக்கியவானயிருந்தாலும் சிரேஷ்டனுகமாட்டான் (அதெப்படி ஐயா) எல்லாவற்றையும் பார்த்து அறிகிறவன் ஒராபரணமும் இல்லாதிருந்தும் சிரேஷ்டமாகும் அப்படிப்பட்ட அறிவு தங்களுக்கில்லாததை ரத்னகடகமுதலாகிய அநேக ஆபரணங்களைத் தரித்துக்கொண்டிருந்தும் அந்தக் கண்களைப்போல சிரேஷ்டமாகாது இதுபோலவென்று அறியுங்கள்.

கஅ. பிள்ளைகளே, நல்லவர்களுடனே பழகினால்உங்களுக்கு நல்லகுணமுண்டாகும் கெட்டவர்களுடன் பழகினால் உங்களுக்குக் கெட்டகுணம் உண்டாகும் (அதெப்படி ஐயா) மழைநீர் நல்ல மணலிலே விழுந்தால் நல்லநீராகும் உப்புமணலிலே விழுந்தால் உபபுநீராகும் இதுபோலவென்று அறியுங்கள்.

கசு. பிள்ளைகளே, நீங்கள்எல்லாருடனேயும் இதமாகப்பேசினுல் மரியாதை கிடைக்கும் கடினமாகப் பேசினல் அவமானங்கிடைக்கும் (அதெப்படி ஐயா) கிளிப்பிள்ளை எல்லாருக்கும் சந்தோஷம் உண்டாகப்பேசுகிறதினல் பாலும்பழமும் கொடுத்துக் கையில் எடுத்துக்

கொண்டு கொடுக்கிறார்கள் காக்கை எல்லாருக்கும் கோபமுண்டாகக் கூவுகிறதினால் கோலாலடித்துத் துரத்திவிடுகிறார்கள் இதுபோலவென்று அறியுங்கள்.

௨௰. பிள்ளைகளே, நீங்கள் பெரியோர்களுக்கு வணங்கிநடந்தால் சௌக்கியம் உண்டாகும் எதிரிட்டு நின்றால் கேடுவரும் (அதெப்படி ஐயா) பெருவெள்ளத்துக்கு முன்னே வணங்கின கோரைப்புல்லுந் திரும்பித் தலையெடுத்துப் பிழைக்கின்றது வணங்காமல் எதிரிட்டு நின்றமரம் முறிப்பட்டுப் போகின்றது இதுபோலவென்று அறியுங்கள்.

௨௧ பிள்ளைகளே, உயர்ந்தகுலத்திலே பிறந்தாலுங் குணமில்லாதவனை ஒருவரும் கிட்டச் சேர்க்கமாட்டார் தாழ்ந்தகுலத்திலே பிறந்தாலுங் குணமுள்ளவனை எல்லாருங் கிட்ட வரவழைப்பார்கள் (அதெப்படி ஐயா) தித்திப்பாகிய கரும்பிலே பிறந்த பூவாசனை இல்லாமையால் ஒருவருங் கைகொள்ளார்கள் கசப்பாகிய அலரியிலேபிறந்த பூவாசனையிருக்கிறபடியால் எல்லோருங் கைகொள்வார்கள் இதுபோலவென்று அறியுங்கள்.

௨௨ பிள்ளைகளே, மானமுள்ளவன் பெரிய காரியங்களைச் செய்வான் மானமில்லாதவனோ வென்றால்

விறென அற்பகாரியத்தைச் செய்து அதிக சந்தோஷ த்தை அடைவான் (அதெப்படி ஐயா) சிங்கம்பசித்திரு ந்தாலும் யானைமாமிசத்தையே தேடித்தின்னும் நாயா னது தற்கந்தமுடைய எலும்பைக்கடித்துச் சந்தோஷ த்தையடையும் இதுபோலவென்று அறியுங்கள்.

௨௩. பிள்ளைகளே, செல்வம் வந்தகாலத்திலே அது மே உயர்த்துதலால் அப்போது வணங்கல் இருக்கவேண்டும் வறுமைவந்த காலத்திலே அதுவே தாழ்த்துத லால் அப்போது உயர்வாயிருக்கவேண்டும் (அதெப்படி ஐயா) மாமரமானது எவ்வளவு சாய்ந்துக்கொண்டிருக் கின்றதோ அவ்வளவு சாய்ந்துக்கொண் டிருக்கின்றது காய்ப்பு இல்லாத மாமரம் வளையாமல் நிமிர்ந்துக்கொ ண்டு இருக்கின்றது அதுபோலவென்று அறியுங்கள்.

௨௪ பிள்ளைகளே, புத்தியுளளவன் தூரத்திலிருந்து வந்தும் ஒருவனிடத்தில் இருக்கிறகுணத்தை அறிவான் மூடன் சமீபத்திலிருந்தும் அவன் குணத்தை அறியமாட் டான் (அதெப்படி ஐயா) வண்டு தூரத்திலிருந்தாம ரைப்பூவினது தேனை உண்ணும் தவளை அதன் சமீபத் திலிருந்தும் அதன்தேனை உண்ணாது இதுபோலவெ ன்று அறியுங்கள்.

௨௫. பிள்ளைகளே, செவ்வையான ரூபத்தினாலே நல்லவனென்றும் செவ்வையில்லாத ரூபத்தினாலே கெட்டவனென்றும் ஒருவனைச் சொல்லலாகாது (அதெப்படி ஐயா) அம்பு கோணல் இல்லாமலிருந்தும் கொல்லுகின்றது வீணை கோணலாக இருந்தும் காதுக்கு இன்பமான ஓசையைத் தருகின்றது இதுபோலவென்று அறியுங்கள்.

௨௬. பிள்ளைகளே, மேலோருக்கு உபகாரஞ்செய்தால் அவர் பிரதியுபகாரஞ்செய்வார் கீழோருக்கு உபகாரஞ்செய்தால் அவர் அபகாரமே செய்வார் (அதெப்படி ஐயா) பசுவுக்கு இரைகொடுத்தால் அது மதுரமான பாலைக்கொடுக்கும் பாம்புக்கு இரைகொடுத்தால் கொடிதாகிய விஷத்தைக் கொடுக்கும் இதுபோலவென்று அறியுங்கள்.

௨௭. பிள்ளைகளே, பெரியோர்கள் உயர்ந்த நிலையிலிருந்து தவறினால் மிகுந்த வருத்தத்தை யடைவார்கள் சிறியோர்கள் உயர்ந்த நிலையிலிருந்து தவறினால் அப்படிப்பட்ட வருத்தத்தை யடையார்கள் (அதெப்படி ஐயா) யானைமுதலாகிய பெரிய பிராணிகள் கீழேவிழுந்தால் பிழைப்பது அரிது எறும்புமுதலான சிறிய பிராணிகள் விழுந்தாலும் பிழைக்கும் இதுபோலவென்று அறியுங்கள்.

௨௮. பிள்ளைகளே, சிறிய ரூபத்தை யுடையவரிடத்திலும் பெரிய காரியத்தைச் செய்யும் வல்லமையுண்டு பெரியரூபத்தை உடையவரிடத்திலும் சிறியகாரியத்தைச் செய்யமாட்டாமையும் உண்டு (அதெப்படி ஐயா) ஆலம்விதை மிகச்சிறியதாக இருந்தாலும் பெரியவிருக்ஷமாகி அநேகம்பேருக்கு நிழல்கொடுக்கும் பனைவிதை மிகப்பெரிதாகயிருந்தும் விருட்சமானால் ஒருவருக்காகிலும் நிழல் கொடுக்கமாட்டாது இதுபோலவென்று அறியுங்கள்.

௨௯ பிள்ளைகளே ஒரு தாய்வயிற்றிலிருந்து பலபிள்ளைகள்பிறந்தால அவர்களுக்குள்ளே ஒருபிள்ளைக்குஇருக்கிற குணம் மற்றொருபிள்ளைக்கு வரமாட்டாது (அதுஎப்படி ஐயா) ஒரு குளத்துநீரிலே தாமரையும் குவளையும் அல்லியும் நெய்தலுமுண்டாகின்றன ஒன்றற்குணம் மற்றொன்றுக்கு வரவில்லை இதுபோலவென்று அறியுங்கள்.

௩௰. பிள்ளைகளே, உலகில் நல்லவர்கள் சிலபேர்கள் அருமையாக இருப்பார்கள் பொல்லாதவர்கள் பலபேர் இருப்பார்கள் (அதெப்படி ஐயா) ரத்தினக்கல் கொஞ்சமாக இருக்கின்றன மற்றகல் அதிகமாக இருக்கின்றன இதுபோலவென்று அறியுங்கள்.

இருபொருள் வாக்கியம் முற்றிற்று.

---






கடவுள் துணை.

# முப்பொருள் வாக்கியம்.



௫௧. பிள்ளைகளே தலைமையானவர் ஆரம்பத்திலே ஒருநாள் உபகாரஞ்செய்தவனுக்கும் நடுவானவர் சில நாள் விட்டுவிட்டு உபகாரஞ்செய்து வருகிறவனுக்கும் கடையானவர் தினந்தோறும் விடாமல் உபகாரஞ்செய்து வருகிறவனுக்கும் பிரயோசனத்தைத் தருவார்கள் (அது எப்படி ஐயா) பனைமரமென்பது பாட்டுத் துவக்கத்திலே ஒருநாள் சலம்விட்டவனுக்கும் தென்னைமரம் நடுவே சில நாள் விட்டுவிட்டு சலம்விடுகிறவனுக்கும் பாக்குமரம் ஒருநாளாகிலும் விடாமல் சலம் விடுகிறவனுக்கும் பலனைக் கொடுக்கும் இதுபோலவென்று அறியுங்கள்.

௫௨. பிள்ளைகளே, உத்தமருக்குச்செய்த உபகாரம் நன்றாகப் பிரயோசனப்பட்டும் பிரகாசிக்கும் மத்திமரு க்குச் செய்த உபகாரம் பிரகாசிக்கிறதுபோலத் தோன் றும் அதமருக்குச் செய்த உபகாரம் அப்பொழுதே தெரியாமல் மறைந்துபோம் (அது எப்படி ஐயா) சிப்பியிலே விழுந்த மழைத்துளி முத்தாகும் தாமரையிலே

விழுந்த பனி புல்லின் நுனியில் முத்தைப்போலத் தோன்றும் தினையின்மேல் விழுந்த மழைத்துளி அப்போதே மறைந்துபோம் இதுபோலவென்று அறியுங்கள்.

௩௩. பிள்ளைகளே அறிவுள்ளவர்களுக்குக் கோபம் பிறந்து வேறுபட்டால் உடனே அக்கோபம் நீங்கிப் பழையபடியே சேர்ந்திருப்பார்கள் நடுத்தரமானவர்களுக்குக் கோபம்பிறந்து வேறுபட்டால் ஒருவர் சமாதானஞ்செய்து சேர்க்க முன்போலச் சேர்ந்திருப்பார்கள் மூடர்களுக்குக் கோபம்பிறந்து வேறுபட்டால் திரும்பி ஒருபோதுஞ் சேரமாட்டார்கள் (அது எப்படி ஐயா; நீரின் பிளவுகள் உடனே பழையபடி சேர்ந்துகொள்ளும் பொன்னின் பிளப்புகள் ஒருவர் பொடிவைத்துப் பற்றவைத்தால் பழையபடிசேரும் கல்லின் பிளப்புகள் திரும்பி ஒருபோதுஞ் சேரமாட்டாது இதுபோலவென்று அறியுங்கள்.

மும்பொருள் வாக்கியம் முற்றிற்று.